நெ. **896**

இருமலுக்கு.

| | | |
|---|---|---|
| ஒலியம். கஜபுடை. | துளி | 12 |
| ஸ்பிரிட். அமோனியா. அரொமாடிக். | டிராம் | 1 |
| சிரப். சில்லா. | ,, | 4 |
| ஸ்பிரிட். க்ளோரபாரம். | ,, | 1 |
| ஆக்வா. | அவுன்சு | 6 |

இவைகளைச் சேர்த்து ஒரு அவுன்சு வீதம் ஒரு நாளைக்கு மூன்று விசை உபயோகிக்கவும். **டாக்டர். பாரிஸ்.**

நெ. **897**

படுக்கையினால் காணும் புண்களுக்கு.

| | | |
|---|---|---|
| ஆஸிட். போரிக். | டிராம் | ½ |
| ஸ்பிரிட். ரோஜ். | ,, | ½ |
| ஸ்பிரிட். ரெக்டிபிகேடிஸ். | ,, | 2 |
| லானோலைன். | அவுன்சு | 1 |

இவைகளைச் சேர்த்து ஆயிண்டுமெண்டாக்கி மேலுக்கு மாத்திரம் உபயோகிக்கவும். **டாக்டர். ஹாமில்டன்.**

நெ. **898**

மேகரிணங்களுக்கு.

| | | |
|---|---|---|
| லைக்வர். ஆர்சனிகேலிஸ். | டிராம் | ½ |
| டின்க்ஷர். பெர்ரை. பெர்நைட். | ,, | 1 |
| டின்க்ஷர். ஆரண்ஷை. | ,, | 2 |
| சிரப். ரோஜ். | ,, | 6 |
| ஆக்வா. | அவுன்சு | 6 |

இவைகளைச் சேர்த்து ஒரு அவுன்சு வீதம் ஒரு நாளைக்கு மூன்று விசை உபயோகிக்கவும். **டாக்டர். மேற்சொன்னவர்.**

நெ. **899**

வயிற்றுவலிக்கு.

| | | |
|---|---|---|
| லைக்வர். பிஸ்மத். எட். பெப்சின். கோ. | டிராம் | 4 |
| லைக்வர். மார்பியா. | ,, | 1 |
| ஸபிரிட். க்ளோரபாரம். | ,, | 1 |
| சிரப். ஜின்ஜிபெரிஸ். | ,, | 6 |
| ஆக்வா. | அவுன்சு | 6 |

இவைகளைச் சேர்த்து ஒரு அவுன்சு வீதம் ஒரு நாளைக்கு மூன்று விசை உபயோகிக்கவும். **டாக்டர். மேற்சொன்னவர்.**

நெ. **900**

மனோ உற்சாகத்தைக்கொடுக்கும் பானம்.

| | | |
|---|---|---|
| ஆஸிட். டார்டாரிக். | கிரெயின் | 10 |
| டின்க்ஷர். ஆரண்ஷை. | டிராம் | 1 |
| சிரப். ரோஜ். | ,, | 2 |
| ஆக்வா. | அவுன்சு | 10 |

இவைகளைச் சேர்த்து வேண்டும்போது உபயோகிக்கவும்.

**டாக்டர். ஆதர்.**

முற்றிற்று.

# வைத்திய சிகாமணி

## இரண்டாம் பாகம்.

### தமிழ் ஆயுர்வேத முறைகள்.

நெ. **901**

### கஸ்தூரி மாத்திரை.

| | | |
|---|---|---|
| கஸ்தூரி | 1 | குன்றிமணியெடை |
| குங்குமப்பூ | 2 | ௸ |
| கோரோஜனை | 3 | ௸ |

இவைகளை கலுவத்திலிட்டு குற்றமற்ற பெண்களின் முலைப் பாலால் அரைத்து குன்றிமணியளவு மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொள்ளவும்.

உபயோகம். குழந்தைகட் குண்டாகும் பித்த சுரத்திற்கு இஞ்சி சுரசத்திலும் வாத சுரத்திற்கு தேனிலும் அல்லது திரி கடுகக்கியாழத்தாலும் மாந்தசுரம் பொருமல் இவைகட்கு பசு மருந்தென்று வழங்கும் சிலமூலிகையிட்ட வித்தாரசத்தாலும் கொடுக்கலாம். 2-3-4 வேளை அல்லது வியாதி குணப்படுமளவும் கொடுக்கலாம்.

தேரையர்.

நெ. **902**

### கோரோஜனை மாத்திரை.

| | |
|---|---|
| கோரோஜனம் | ஜாதிக்காய் |
| சுக்கு | அரத்தை |
| திப்பிலி | வசம்பு |
| மிளகு | உள்ளி |
| ஓமம் | குங்குமப்பூ |

இவையாவும் சமனிடை யெடுத்து மணிதக்காளி சாற்றில் ஒரு ஜாமம் அரைத்து அப்படியே கலுவத்துடன் ஆறவைத்து (மறு நாள்) கம்மாறு வெற்றிலைச் சாற்றால் ஒரு ஜாமம் அரைத்து அப்படியே கலுவத்துடன் ஆறவிட்டு (மறு நாள்) சுத்திசெய்த ரச கற்பூரம் காலிடைகூட்டி முலைப்பால் விட்டு ஒரு ஜாமம் அரைத்து பச்சைப் பயறளவு மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும். குழந்தைகள் பிணிக்கு தேனிலிடவும்.

சோமாதிபதி பிள்ளை.

நெ. 903

சிறுபிள்ளை கழிச்சலுக்கு

## கட்டுவாதி மாத்திரை.

ஒரு ஜாதிக்காயைத் துளைத்து அதில் 6-உளுந்து நிறை அபினியை வைத்து மஞ்சள் கவசம் செய்து அதற்குமேல் இரண்டு மூன்று புரை துணி சுற்றி புற்றுமண் அல்லது அரைத்த மண் பூசி நன்றாய் உலர்த்தி அதற்குத் தகுந்த சிறு புடமிட்டு எடுத்து கவசத்தை நீக்கி ஜாதிக்காயும் அபினியும் சேர்ந்த எடைக்கு சரி எடை பேரீச்சம்பழம் சேர்த்து முலைப்பால் விட்டரைத்து பச்சைப் பயறளவு மாத்திரை செய்து வைத்துக் கொள்ளவும். 1-குளிகையை தேனில் இழைத்துக் கொடுக்கவும். காலை மாலையாக கழிச்சல் குணப்படுமளவும் கொடுக்கவும்.

மைசூர் அரண்மனை சர்ஜன்

மஞ். ஜகந்நாத நாயுடு.

---

நெ. 904

சகல கழிச்சலுக்கும்

## மஹா கட்டுவாதி மாத்திரை.

(சிறியவர் பெரியவர் யாவரும் சாப்பிடலாம்.)

| | |
|---|---|
| ஜாதிக்காய் | குராசானி |
| ஜாதிபத்திரி | கோரைக்கிழங்கு |
| இலவங்கம் | வெந்தயம் |
| ஏலம் | சீரகம் |
| அதிமதுரம் | சிறுநாகப்பூ |
| அதிவிடயம் | புளியாரை |
| அபினி | வாழைப்பூ |
| கஞ்சா | மாதளம் பிஞ்சு |

இவைகள் யாவும் சரியெடை யெடுத்து அபினி தவிர மற்றவையிடித்து வஸ்திரகாயம் செய்து பசும்பாலில் பிட்டவியல் செய்து நிழலில் உலர்த்தி கலுவத்திலிட்டு அபினியும் சேர்த்து வாழைப்பூ சாற்றாலாவது புளிப்பு மாதளம் பழச் சாற்றாலாவது அரைத்து மிளகளவு மாத்திரைகள் செய்து வைத்துக்கொள்ளவும். சிறுவர்களுக்கு 1-மாத்திரையும் பெரியவர்களுக்கு இரண்டு மாத்திரையாகப் பொடித்து கொஞ்சம் சர்க்கரை கலந்து கொடுக்கவும். இப்படி தினத்திற்கு 2-அல்லது 3-தடவை கொடுக்க சகல பேதியும் கழிச்சலும் கட்டும்.

சிறுமணவூர். முனிசாமி முதலியார்

நெ. 905

# ஊழி மாத்திரை.

| | |
|---|---|
| பூரம் | கற்பூரம் |
| லிங்கம் | சாம்பிராணி |
| நெல்லிகெந்தகம் | ஜாதிக்காய் |
| அபினி | ஜாதிபத்திரி |
| கஞ்சா | பூண்டு |
| கிராம்பு | அதிவிடயம் |
| வசம்பு | சுக்கு |
| சோம்பு | திப்பிலி |
| கரியோமம் | வெண்காரம் |

இவைகள் யாவும் சரி எடை யெடுத்து சூரணித்து முலைப் பாலால் இரண்டு ஜாமம் அரைத்து கடலைப்பிரமாணம் மாத்தி ரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும். ஊழி பேதி கண்டவர்களுக்கு சாதம் கொதிக்கின்ற தண்ணீரிலாவது சாராயத்திலாவது 1-மாத்திரையிழைத்துக் கொடுக்கவும். பேதி நிற்குமளவும் 2-மணி நேரத்திற் கொருதரம் கொடுக்கவும். இளைப்பு ஆயாசம் பசி யென்று கேட்குமளவில் கோதுமை கஞ்சி கொடுக் கவும். சிலருக்கு இரண்டொரு விசை மாத்திரை கொடுத்தவுடனே கஞ்சி கொடுக்கவேணும். ஆகையால் சிகிச்சை செய்பவர் வியாதி யின் நோக்கத்தை யூகித்து நடத்தவேண்டும்.

நேடிவ் டாக்டர். ஆவுல. ராமாஞ்சுலு நாயுடு.

---

நெ. 906

# மதனகோலாகலரசமணிக் குளிகை.

கொட்டை நீக்கிய கர்ச்சூரக்காய் பலம் 10 ஷை காய்கள் ஒவ்வொன்றிலும் ஊமத்தன் விதைகளை நிறைத்து காய்களை நூலி னால் கட்டி பசும்பால் விட்டுப் பிசைந்த கோதுமை மாவை காய் களுக்குக் கவசம் செய்து நிழலில் உலர்த்தி ஒரு படி பசும்பாலில் போட்டு அடுப்பேற்றி பால் சுண்டுமளவும் காய்களை வேக வைத்து இறக்கி ஆறியபின் கோதுமை கவசத்தை நீக்கி அதிலடைத்த விரை களையும் நீக்கி உதிர்த்துவிட்டு காய்களை மாத்திரம் நிழலில் உலர்த்தி யெடுத்துக் கொண்டு (அத்துடன்)

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த நெல்லிகெந்தகம் | பணவிடை | 2 |
| வாலைரசம் | பணவிடை | 3 |

| | | |
|---|---|---|
| லவுங்கம் | பணவிடை | 2 |
| அபினி | பணவிடை | 2 |
| ஜாதிபத்திரி | பணவிடை | 2 |
| பச்சைக்ககற்பூரம் | காசிடை | 3 |
| குங்குமப்பூ | காசிடை | 3 |
| இசப்கோல்விரை | காசிடை | 3 |
| பலகரைபற்பம் | காசிடை | 3 |
| திப்பிலி | பலம் | 2 |
| கஞ்சா | பலம் | ½ |
| முருங்கைப்பூ | பலம் | 2 |
| முருங்கைக்காயினுள்விதை | பலம் | 2 |
| சீனைகற்கண்டு | பலம் | 2 |

இவைகள் யாவும் பொடித்து கலுவத்தி லிட்டு எருமைப் பாலினல் மைபோல மிகவும் ஊக்கமாய் அரைத்து தேற்றாங் கொட்டைப் பிரமாணம் மாத்திரைகள் செய்து வைத்துக் கொள்ளவும். சர்க்கரையிலாவது தேனிலாவது காலை மாலை ஒவ்வொரு மாத்திரைகள் சாப்பிட்டு வரவும். இரவில் மாத்திரம் காரம் புளிப்பு இலே சாகக்கூட்டி போஜனம் செய்து வரவேண்டியது. பால் விசேடமாய் புசித்தால் மிகவும் நலம் மனதை நிலைப்படுத்தி 10-20-நாள் மட்டும் ஸ்திரீ போகம் செய்யாதிருந்து இம்மாத்திரையை புசித்துக்கொண்டு வந்தால் அதனுலுண்டாகும் மனக்களிப்பும் தாதுவிர்த்தியும் தேக வலிவும் அவரவர்களே தெரிந்து கொள்ளலாம்.

நேடிவ் டாக்டர். அ. அருணசல முதலியார்.

---

நெ. 907

## தங்கரேக்கு மாத்திரை.

| | | |
|---|---|---|
| தங்கரேக்கு | விராகனிடை | 1 |
| கஸ்தூரி | „ | 1 |
| கோரோஜனை | „ | 7½ |
| பச்சைக்கற்பூரம் | „ | 5 |
| குங்குமப்பூ | „ | 5 |
| மயில்ரோஜனம் | „ | 1 |
| படிகாரச்சுன்னம் | „ | ½ |

இவைகளை ஈசுரமூலிரசத்திஞல் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு

இரவில் புளிப்பு சேர்க்காத போஜனம் அல்லது பசும்பால் விட்டு போஜனம் செய்த பிறகு 1-மாத்திரை யெடுத்து பொடித்து சர்க்கரையுடன் கலந்து சாப்பிட்டுவிட்டு 3-மணி நேரம் பொறுத்து படுக்கை யறைக்குட் சென்றால் அதனாலுண்டாகும் மனக்களிப்பை அவரவர்களே அறியக்கடவது. உடலில் சீதளம் சுரம் ஜன்னியிருந்தாலும் நீங்கும். (ஆனால்) பெருமையுள்ள புருஷர்கள் 10-20 நாள் வரையில் போகிக்காதிருந்தால் தேகத்திற்கு நல்லவலிவுண்டாகும். மாமிசம் பால் முதலியவற்றை மிச்சம் புசிப்பவர்களுக்கு அதிக அனுகூலமுண்டு.

நேடிவ் வைத்தியர். கோ. இராஜு முதலியார்.

---

நெ. **908**.

## விரோசன மிளகு.

கள்ளிமரத்தைத் துளைத்து தேவையான மிளகை அதில் அடைத்து அதே மரத்தின் துண்டினால் அந்த மரத்தின் துளையை மூடி வெட்டுவாய் தெரியாமல் செம்மண் சீலை சாத்தி மேலே புற்று மண் கரைத்துப் பூசி 21-நாள் சென்றபின் மேற்படி கவசங்களை நீக்கி மிளகை யெடுத்துக்கொண்டு மலச் சிக்கல் மலபந்தம் இவைகளுக்கு தேகதிடமறிந்து 1-2-3 வரையிலும் தாம்பூலத்துடன் மென்று தின்னும்படி கொடுத்தால் நன்றாய் பேதியாகும். பத்திய மில்லை. கறிசூப்பு சாதம் ரொட்டி முதலியவை சாப்பிடலாம்.

☞ இப்படியே லவங்கத்தையும் செய்து உபயோகிக்கலாம்.

மைசூர் அரண்மனை சர்ஜன்
மஞ். ஜகந்நாத நாயுடு.

---

நெ. **909**.

## சுகவிரோஜன லேகியம்.

சுக்கு, திப்பிலி, மிளகு, கொடிவேலி, சீரகம், கடுக்காய் தோல், தான்றிக்காய்தோல், நெல்லிவற்றல், பேதிக் கிழங்கு இவைகளை சமனிடையெடுத்து இடித்து வஸ்திரகாயம் செய்து திரும்பவும் நிறுத்து அதற்குச்சரியிடை பனைவெல்லம் நிறுத்தெடுத்து தகுந்த ஜலத்திற் கரைத்து ஜீராவைப்போல் பாகுசெய்து அந்த பாகில் ஷை சூரணத்தைக் கொட்டிக் கிளரி கடைசியில் போதுமான நெய்விட்டுக் கிளரி லேகியபாகமாய் செய்து வைத்துக்கொண்டு வேண்டும்போது

கழற்சிக்காயளவு அல்லது சற்றேறக்குறைய தேகதிடப்படி சாப்பிட்டால் சுகமாய் விரோசனமாகும் மூலம், குன்மம், சூலை, நீங்கும். பித்தசாந்தியாகும் பசிதீபனமுண்டாகும்.

தஞ்சை சமஸ்தான பண்டிதர்
பரங்கிப்பேட்டை. அப்பு வைத்தியர்.

---

நெ. **910.**

## புழுவெட்டிற்கு மை.

பொரித்த வெண்காரம் ஒரு விராகனிடை யெடுத்து வெண்கலத்தட்டில் வைத்து அதன் பேரில் கையாந்தகரைச் சாறுவிட்டு இரும்புப் பாத்திரத்தினால் 3-நாழிகை அரைத்து அதன் பிறகு கொஞ்சம் வெண்ணெய் சேர்த்து சங்கு அல்லது பாலாடையினால் 3-நாழிகை அரைத்தெடுத்து ஒரு டப்பியில் வைத்துக்கொண்டு புழுவெட்டினால் மயிர் உதிர்ந்தவிடத்தில் 5-நாள் தடவினால் மயிர் மறுபடியும் முளைக்கும்.

தஞ்சை சமஸ்தான வைத்தியர்
ஐயாக்கண்ணு பிள்ளை.

---

நெ. **911.**

சகல உஷ்ணத்திற்கும்

## ஏலாதி சூரணம்.

ஏலம், சீரகம், சன்னலவுங்கப்பட்டை, லவுங்கப்பட்டை, அதிமதுரம், நெல்லிவற்றல், லவுங்கப்பத்திரி, சிறு நாகப்பூ, கருவேப்பிலையீர்க்கு, சந்தனத்தூள், ஜடாமாஞ்சி, சோம்புவகைக்குப் பலம்-1. கொத்தமல்லி விதை பலம். 12: கற்கண்டு பலம்-24. இதில் கற்கண்டு தவிர மற்ற சரக்குகளை யெல்லாம் இடித்து மெல்லிய துணியில் வஸ்திரகாயம் செய்து பிறகு கற்கண்டை யிடித்து தூள் செய்து யாவும் கலந்து புதிய கலசத்தில் வைத்துக்கொண்டு ஒரு வேளைக்கு 2-விராகனிடை வீதம் 2-வேளையும் ஒரு மண்டலம் உட்கொண்டு வந்தால் சகல உஷ்ணரோகம், பித்தம், மூத்திர வெரிவு, கைகால் எரிவு இவை அனுகூலமாகும் அனுபோகமான மருந்து.

தஞ்சை சமஸ்தான வைத்தியர்
ஐயாக்கண்ணு பிள்ளை.

நெ. **912**

## மேகச் சூலைகட்கும்

## புதிய கிரந்திரணங்களுக்கும் மாத்திரை.

முற்றிய சித்திர மூலச்செடி வேரின் பட்டை இடை-1 இரச கற்பூரம் இடை-1. ஓமம் இடை-1. பனைவெல்லம் இடை-1. இவை நான்கும் சரியிடையாய் நிறுத்தெடுத்து கலுவத்திலிட்டரைத்து பதமாவதற்காக கொஞ்சம் தேன்விட்டு மை போல் மிகவும் நாணயமாய் அரைத்து மிளகுபோல் நடிக்க மாத்திரைகள் செய்து ஒன்றோடொன்று ஒட்டாதிருக்க (மக்னிஷா) என்னும் பவுடரைத் தூவி மரடப்பியில் வைத்துக்கொள்ளவும்.

இந்த மாத்திரையை காலை ஒன்று மாலையில் ஒன்றாக இரு வேளையும் வியாதிக்குத் தக்கபடி 10-நாள் 20-நாள் சாப்பிட மேகத்தாலுண்டான கிரந்தி, கிரந்திரணங்கள், கீல்களிலுள்ள வாய்வுகள், மேகசூலை இவை தீரும். நல்லெண்ணெய் கடுகு பூசணிக்காய், அகத்திக்கீரை சிறுகீரை தேங்காய்ப் பால் புகையிலை போகம் லாகிரி இவை ஆகாது.

காபி, ரொட்டி, ஆட்டுக்கறி, முருங்கை, கத்திரி அவரை முதலிய காய் தினுசுகள், நெய், பால், இவை ஆகும் அனுபோகமானது.

கிறுமணவூர் முனிசாமி முதலியார்.

---

நெ. **913**

## அயாரீவ்ஸ் மாத்திரை.

| | | |
|---|---|---|
| அரிசிதிப்பிலி | இடை | 1 |
| ஆனைதிப்பிலி | இடை | 1 |
| சுத்திசெய்த வாளம் | இடை | 1 |
| சீமை மூசாம்பரம் | இடை | 2 |

இவைகளை கலுவத்திலிட்டு இஞ்சிச்சாறு விட்டு போதுமான பதத்திற்கு அரைத்து மிளகளவு மாத்திரைகள் செய்து வைத்துக் கொள்ளவும். இரவில் போஜனம் செய்தபின் 2-மணி நேரம் பொறுத்து 1-2-3-வரையில் உடைக்காமல் முழுமாத்திரைகளாக வாயிற்போட்டு விழுங்கி கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். விடிய ஆறு மணிக்குள்ளாக தேகதிடப்படி பேதியாகும். அல்லது எத்தனை மாத்திரை தின்றதோ அத்தனை விசை பேதியாகும். காலையில் வழக்கம்போல் காப்பி ஆப்பம் ரொட்டி (அல்லது) சூப்பு சாதம் முதலிய ஆகாரம் சாப்பிட்டு உத்தியோகங்களுக்குப் போகலாம்.

நேடிவ் வைத்தியர். அப்பாதுரை பிள்ளை.

நெ. 914

## காரீயம் வெள்ளீயம் இவைகளின் சுத்தி.

காரீயமாவது வெள்ளீயமாவது சுத்தி செய்ய வேணுமாகில் அவைகளை அக்கினி முகத்தில் உருக்கி நல்லெண்ணெயில் 7-தரம் சாய்க்கவும் இப்படியே கோமூத்திரத்தில் 7-தரம், புளித்த மோரில் 7-தரம், கொள்ளு வேய்த்த ஜலத்தில் 7-தரம், எருக்கம்பாலில் 7-தரம், வெள்ளாட்டுப் பாலில் 7-தரம் உருக்கி ஊற்றி யெடுத்துக் கொண்டு அவுடதங்கள் முடித்தால் வியாதியின்பேரில் வெகு வேகமாய்ப் பாயும். பரங்கிப்பேட்டை அப்பு வைத்தியா.

---

நெ. 915

## காரீய பஸ்பம்.

ஆடாதோடை ரசத்தையும், காரீயத்தையும் சரியிடை யெடுத்து ஒரு சட்டியில் போட்டு அடுப்பேற்றி ஆடாதோடைக் கொம்பினால் கிண்டிக்கிண்டி 4-ஜாமம் வறுத்தால் பஸ்பமாகும்.

ஷை ப. அப்பு வைத்தியர்.

---

நெ. 916

## காரீய செந்தூரம்.

மேற்படி காரீயபஸ்பத்தை கல்வத்திலிட்டு ஆடாதோடைச் டைச் சாறுவிட்டு 3-ஜாமம் அரைத்து பில்லைகள் செய்து காய வைத்து இருபது வரட்டியில் புடம்போடவும். இப்படி பத்து புடம் போட்டு ஓமக்கியாழத்தினால் பத்து புடம் போட்டு கொட்டைக் கரந்தைச் சாற்றினால் பத்து புடம் போட்டு வெற்றிலைச் சாற்றால் அரைத்து பத்துதரங் கஜபுடம் போட்டால் மிகவும் வலிவான செந்தூரமாகும். வியாதிக்குத் தக்க அனுபானங்களிலிட அனேக வியாதிகள் தீரும். ஷை ப. அப்பு வைத்தியர்.

---

நெ. 917

## பவளபற்பம்.

பவளம் அல்லது பவளக்கொடிகள் வேண்டிய மட்டும் எடுத்து பீங்கான் கோப்பையில் போட்டு அது மிதக்குமளவு எலுமிச்சம்பழச் சாறுவிட்டு மூன்றுநாள் ஊறிய பின் எடுத்து வெந்நீரில் அலம்பிவிட்டு இலந்தை யிலையிலாவது சிறு கீரையிலையில்

முத்தைக்குள் பவளத்தை வைத்து சுமார் விளாங்காயளவு இருந்தால் 20-வரட்டில் புடமிட்டு ஆறியபின் எடுத்து எருக்கம் பால்விட்டு அரைத்து பில்லைதட்டி காயவைத்து ஓட்டில் வைத்து மேலோடு மூடி சீலைசெய்து 15-வரட்டியால் புடமிட்டு ஆறியபின் எடுத்துக் கொள்ளவும். வெண்ணெயில் அல்லது நெய்யில் அல்லது தகுமான லேகியங்களில் உபயோகப்படுத்தினல் க்ஷயம், காசம், உடம்பு வலிவு, மேகக்குடைச்சல் இவைகள் தீரும். அனுபோக வைத்தியம். சிறுமணவூர் முனிசாமி முதலியார்.

---

நெ. **918**

## பவள பற்பம்.

ஒருபலம் பவளத்தை எடுத்து எலுமிச்சம்பழச் சாற்றில் இராப்பகல் ஒருநாள் ஊறவைத்து அலம்பி யெடுத்துக்கொண்டு கீழாநெல்லியை அரைத்து விளாங்காய்ப்பிரமாணம் கவசம் செய்து அதற்கு மேல் செம்மண்சீலை 7-செய்து அரைதிட்டம் காய்ந்த பின்பு முன்போல் புடமிட்டு ஆறியபின் எடுத்துக் கொள்ளவும். சுரம், குளிர், ஜன்னி, கபம் இவைகளுக்குத் தக்க அனுபானங்களில் இடவும் குணமாகும் ஈளை இருமல் முதலியனவும் தீரும். அனுபோக வைத்தியம். சிறுமணவூர் முனிசாமி முதலியார்.

---

நெ. **919**

## முத்து பற்பம்.

கெட்டிமுத்து ஒருபலம் எடுத்து பீங்கான் கோப்பையில் போட்டு, தேன்விட்டு மூன்று நாள் ஊறவைத்து அலம்பிய பின், சங்கம்பழச்சாற்றில் ஒருநாள் ஊறவைத்து எடுத்து பாப்பார முள்ளப்பழத்தின் ரசத்தினல் மெழுகுபோல் ஆகுமளவும் அரைத்து பில்லைதட்டி காயவைத்து ஓட்டிலிட்டு மேலோடு மூடி நாலைந்து சீலைசெய்து காய்ந்தபின் சுமார் முப்பது எருவில் புடம் போட்டு ஆறியபின் எடுத்துக்கொள்ளவும். இதை தங்கபஸ்பத்துடன் சரியிடைகூட்டி நெய்யில் வெண்ணெயில் அல்லது தகுந்த லேகியங்களில் சாப்பிட அபரிமிதமான தாதுபுஷ்டியுண்டாகும்.

சிறுமணவூர் முனிசாமி முதலியார்.

---

நெ. **920**

## தங்க பற்பம்.

குந்தனமிழைக்கும் தங்க ரேக்கு (½) விராகனிடைய எடுத்து உப்பிலாங் கொடியை யிடித்துப் பிழிந்த சாற்றை வடிகட்டி அதி

ஞல் ஷை தங்கத்தை இரண்டு ஜாமம் அரைத்து பில்லைதட்டி காய்ந்த பின் ஓட்டிலிட்டு மேலோடு மூடி மூன்று சீலைமண் செய்து காய்ந்த பின் முப்பது வரட்டியில் புடமிடவும். ஒருசமயம் சுத்தக் கருப்பா யிருந்தால் ஷை மூலிகை சாற்ருல் பிசைந்து பில்லைதட்டி மறுபடம் போட்டால் சாம்பல் வர்ணமாயிருக்கும். அனுபானங்களில் கொடுத் தால் அண்ட வாய்வு, மேகவாயு, பித்தவாயு, சர்வ ஜன்னிகள், சர்வ தோஷங்களும் தீரும் வலிப்பு, இசைப்பு, கிராணி, பெரும்பாடு, பிரமியம், பித்தவெட்டை எந்தவியாதியும் தீரும். அரை அரிசியிடை க்குமேல் 1-அரிசிக்குள் கொடுக்கவேணும். புளி, புகை, பெண், நல்லெண்ணெய், கடுகு, மீன், கறுவாடு, வாகிரிவஸ்து இவைகள் கூடா. பால், நெய், தயிர் நாஜுக்கான பதார்த்தங்கள் சேர்த்துக் கொள்ளவும்.

வைராகிமுறை, ஐதராபாக்கம்.

---

நெ. **921**

## சொர்ண சுத்தி.

தங்கத் தகட்டிற்கு செம்மண்ணினுல் லேப்பங் கொடுத்து கரிநெருப்பில் வைத்து சிவக்கக்காய்ச்சி ஆறவைத்துக் கொள்ளதே சுத்தியாகும். இந்த தங்கத்தினுல் அடியில் சொல்லும் சொர்ண பற்பமும் செந்தூரமும் செய்துகொள்க.

பரங்கிப்பேட்டை. அப்பு வைத்தியர்.

---

நெ. **922**

## சொர்ணபற்பம்.

மேற்கண்டபடி சுத்திசெய்த தங்கத்தை மெல்லியதாகத் தகடு கள் தட்டி (ஒருபலம்) எடுத்து அதற்குக் (கால் பலம்) பொன்னி மிளையை எலுமிச்சம்பழச்சாற்ருல் அரைத்து தகட்டுக்கு லேப்பங் கொடுத்து காய்ந்தபின் அத்தகட்டை ஓட்டில்வைத்து சீலைமண் செய்து கஜபுடம்போடப் பற்பமாகும். ஷை. ப. அப்பு வைத்தியர்.

---

நெ. **923**

## சொர்ணபஸ்பம் வேறுமுறை.

மேற்கண்டபடி சுத்திசெய்த தங்கத்தை மெல்லியதாகத் தகடடித்து அந்த தகட்டிற்கு சமபாகம் கெந்தகத்தை யெடுத்து கரும்பு ரசம் விட்டரைத்து அதை தகட்டிற்கு பூசிகாயவைத்து இப்படி 7-தரம் செய்து காய்ந்தபின் ஓட்டில்வைத்து சீலைமண் செய்து கஜபுடம்போட்டு ஆறிய பின் எடுத்துப் பார்க்க பஸ்பமா கும். இதில் ஒரு பணவிடை அனுபானத்தோடு உட்கொண்டால் இராஜக்ஷயம் முதல் சகல க்ஷயரோகங்களும் இருமலும் சொஸ்த மாகும்.

ப. அப்பு வைத்தியர்.

நெ. **924**

## சொர்ண செந்தூரம்.

(922-நெம்பரில் சொர்ண) சொர்ண பஸ்பத்திற்குச் சரி யிடை ஜாதிலிங்கம் சேர்த்து எருக்கம் பாலைவிட்டு 4-ஜாமம் அரைத்து கலுவத்துடன் ஆறியபிறகு அரசம்பட்டைச் சாறு விட்டு 4-நாள் அரைத்து கலுவத்துடன் ஆறியபின் பூனைக்கா லிவேர் கியாழத்தைவிட்டு நாலு நாள் அரைத்து பில்லைசெய்து காய்ந்தபின் ஒட்டில் வைத்து சீலைசெய்து காட்டுமுட்டையைக் கொண்டு 5-தரம் புடம்போடச் செந்தூரமாகும். இதை ஒரு பணவிடை அநுபானத்துடன் உட்கொண்டால் சகல வியாதி யும் நிவர்த்தியாகும். ப. அப்பு வைத்தியர்.

---

நெ. **925**

## தாம்பிர சுத்தி.

தாம்பிரத்தை ஈசல் இறகு போல் மெல்லிய தகடாக அடி த்து நெருப்பைப்போற் காய்ச்சி கொள்ளுவெந்த நீரில் நனைத் திடுக. இவ்விதம் 7-தரம் செய்தபிறகு புளியிலைச் சாற்றிலும் புளித்தமோரிலும் பொன்னாங்காணிச் சாற்றிலும் கற்றாழைச் சாற்றிலும் இவை ஒவ்வொன்றிலும் அதைத் தனித்தனியாய்க் காய்ச்சி ஒவ்வொருதரம் தோய்த்தால் சுத்தியாகும்.

ப. அப்பு வைத்தியர்.

---

நெ. **926**

## தாம்பிர பஸ்பம்.

மேற்சொல்லியபடி சுத்திசெய்த தாம்பிர தகட்டுக்குச் சம பாகம் கெந்தகமெடுத்து எருக்கம்பால் விட்டரைத்து அந்த தகட்டுக்கு லேப்பங்கொடுத்துக் காயவைத்து குகையில்போட்டு அந்த குகையின் வாய்க்கு ஓடுமூடிச் சீலைமண்செய்து கஜபுடம் போட்டால் பஸ்பமாகும் வைத்தியராயுள்ளவர்கள் அநுபானங் கண்டு கையாடிக் கொள்வார்கள். ப. அப்பு வைத்தியர்.

---

நெ. **927**

## தாம்பிர செந்தூரம்.

மேற்சொன்ன தாம்பிர பஸ்பத்தோடு திரிபலாதி கியாழத் தைச் சேர்த்தரைத்து பில்லைகள் செய்து காயவைத்து புடம் போடுக. இவ்விதம் 7-தரம் செய்தபின் எருக்கம்பாலில் 7-புட மும், செருப்படைச் சாற்றினால் 7-புடமும், ஆலம்பாலினால் 7-

புடமும், விறற்சுண்டிகியாழத்தால் 7-புடமும், அரசம்பட்டைச் சாற்றினால் 7-புடமும், கல்லிச்சுப்பட்டை சாற்றினால் 7-புடமும் போடச் செந்தூரமாகும். ஒருபணவிடை செந்தூரம் அனுபானத்தோடு உட்கொண்டால் வாந்தி, விக்கல், தாகம், மூர்ச்சை முதலிய வியாதிகள் நிவர்த்தியாகும். ப. அப்பு வைத்தியர்.

நெ. 928

காந்த சுத்தி.

காந்தத்தை பொடித்து எலும்மிச்சம்பழ ரசத்திலும், புளித்த மோரிலும், ஒவ்வொன்றிலும் ஒருநாள் ஊறவைத்து மறுபடி காய வைத்தால் சுத்தியாகும். ப. அப்பு வைத்தியர்.

நெ. 929

காந்த பற்பம்.

சுத்திசெய்த காந்தமும், அதில் நாலில் ஒருபாகம் கந்தகமும் சேர்த்து எருக்கம்பால், சிறுபூளைவேர்க்கியாழம், பூவரசன் பட்டைக்கியாழம், இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாள் அரைத்து பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு சீலை மண் செய்து கஜபுடம்போட பற்பமாகும். ப. அப்பு வைத்தியர்.

நெ. 930

காந்த செந்தூரம்.

மேற்கண்ட காந்தபஸ்பமும், அதற்கு அரைபங்கு ஜாதிலிங்கமும் சேர்த்து ஆகாசத்தாமரையின்கியாழத்தால் மூன்று நாள் அரைத்து செம்மண்ணினால் குகைசெய்து காய வைத்து அதைச்சுட்டுக்கொண்டு முன் அரைத்த மருந்தை அதிற்போட்டு மேலோடுமூடி சீலைமண்செய்து காய்ந்தபிறகு மூன்று கஜபுடம் போட சூரிய உதயம்போல் செந்தூரமாகும். ப. அப்பு வைத்தியர்.

நெ. 931

வெள்ளிசுத்தி.

வெள்ளியை மெல்லிய தகடாயடித்து சிவக்கக் காய்ச்சி பழுபாகல் கிழங்கு ரசத்தில் துவைக்கிறது இவ்விதம் ஏழுதரம் செய்யச் சுத்தியாகும். அல்லது மிதிபாவை சமூலச்சாற்றில் மூன்று தடவைக் காய்ச்சித் துவைக்க சுத்தியாகும்.

ப. அப்பு வைத்தியர்.

நெ. 932

## வெள்ளி பஸ்பம்.

சுத்திசெய்த வெள்ளியை ஈசலிறகுபோல் தகடடித்து காகநிம ளையை முலைப்பாலில் அரைத்து7-தரம் தகட்டுக்குப்பூசி காயவைத்து ஒட்டில்வைத்து சீலைமண்செய்து கஜபுடம் போட்டால் பஸ்பமாகும். ஒரு பணவிடை பஸ்பத்தை எந்த வியாதிக்கும் கொடுக்கலாம்.

ப. அப்பு வைத்தியர்.

---

நெ. 933

## வெள்ளி செந்தூரம்.

மேற்சொன்ன வெள்ளி பஸ்பமும் அதற்குச் சமபாகம் ஜாதி லிங்கமும் சேர்த்து ஆலம்பட்டைக் கியாழம், எருக்கம் பால், செருப் படைச்சாறு, ஆலம்பால், வெள் வேலம்பட்டைக் கியாழம், கருப்பஞ் சாறு இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாள் அரைத்துக் காய வைத்து ஒட்டிலிட்டு சீலை மண்செய்து கஜபுடம் போடுக. இவ்விதம் ஒவ்வொரு ரசத்தையும்விட்டு 7-புடம் போட்டால் செந்தூரமாகும் ஒரு பணவிடை செந்தூரத்தை அனுபானத்துடன் உட்கொண் டால் க்ஷயம் முதலிய சகல வியாதிகளும் சொஸ்தமாகும்.

ப. அப்பு வைத்தியர்.

---

நெ. 934

## அப்பிரகவர்ண குணம்.

அப்பிரகத்தில் 4-விதம் உண்டு. சிவப்பு, வெள்ளை, சொர்ண அப்பிரகம், கிருஷ்ண அப்பிரகம். இவை நான்கில் சிவப்பு அப்பிர கம், வாயு உபத்திரவத்தைக் கண்டிக்கும். வெள்ளை அப்பிரகம், சிலேத்தும வியாதியைக் கண்டிக்கும். சொர்ண அப்பிரகம், உஷ் ணத்தைக் கண்டிக்கும். கிருஷ்ண அப்பிரகம், சகல வியாதிகளையும் கண்டிக்கும்.

ப. அப்பு வைத்தியர்.

---

நெ. 935

## அப்பிரகத்தை நவநீதம் செய்யும் விதம் அல்லது சுத்தி செய்கிற விதம்.

கிருஷ்ண அப்பிரகத்தை 3-நாள் புளிப்பு மோரில் ஊறவைத்து 4-வது நாள் உரலில் போட்டு மெல்லிய பொடியாக யிடித்து மறுபடி யும் 3-நாள் புளித்த தண்ணீரில் ஊறவைத்து ஒரு சட்டியின் வாய்க்கு

சவுக்கத் துணிகட்டி அதின் பேரில் பெட்டியைப் போட்டு அதற்கு அரைப்பங்கு நெல்லையும் அத்துடன் போட்டு நீராகாரம் விட்டுக் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பிசைந்து வடிக்கட்டினால் அப்பிரமத்தூளானது ஜலத்துடன்கலந்து அடிச்சட்டியில் இறங்கியிருக்கும். அந்த சட்டியை அசைக்காமல் ஒரு நாள் வைத்திருந்து மறுநாள் அதிலிருக்கும் ஜலத்தை மேலோடு யிறுத்து விட்டால் அப்பிரகமானது வெண்ணெயைப்போல் அடியில் இருக்கும். அதை வழித்து எடுத்துக் கொள்ளவும். இனி அரைக்கிறவிதமும் செந்தூரம் செய்கிற விதமும் அடியிற் காண்க. ப. அப்பு வைத்தியர்.

---

நெ. **936**

## அப்பிரக செந்தூரம்.

சுத்திசெய்த அபிரகத்தைக் கல்வத்திலிட்டு, பசு நெய்யில் ஒரு நாள் அரைத்து கஜபுடம் போடவும். இவ்விதமாக நெய்யில் அரைத்து 8-புடம் போடவும், பிறகு இலைக்கள்ளிச் சாற்றால் அரைத்து 3-புடம் போடவும், வெள்ளாட்டுப் பாலால் அரைத்து 3-புடம் எருக்கம் பாலால் அரைத்து 3-புடம், ஆலம் பாலால் அரைத்து 3-புடம், அதன் பிறகு காட்டுத் துளசிச்சாறு, கற்றாழைச்சாறு, கலியாண பூசணிச்சாறு, அரசம் பட்டைச்சாறு, பொன்னாங்காணிச் சாறு, வெள்ளை சாரணைச்சாறு, தண்ணீர்விட்டான் கிழங்குச்சாறு நிலப்பனைக் கிழங்குச்சாறு, கொட்டைக் கரந்தைச்சாறு, நொச்சிச் சாறு, ஆடாதோடைச்சாறு, சீந்தில்வேர்சாறு, விழுதியிலைச்சாறு, சங்கம் இலைச்சாறு பூவரசம் பட்டைச்சாறு முருங்கைச்சாறு இவைகளின் சாற்றினால் தனித்தனியாய் ஒவ்வொரு நாள்அரைத்து ஒவ்வொரு புடம் போடவும். இவ்விதமாய் நாலு நாள் அரைத்து, நாலு புடம்போட உயர்ந்த செந்தூரமாகும். வாந்தி, அரோசிகம், சுரம், மேகம், பவுமூத்திரம், மூலரோகம் இவைகளெல்லாம் தீரும்.

ப. அப்பு வைத்தியர்.

---

நெ. **937**

## அயக்காந்த செந்தூரம்.

சுத்திசெய்த அயம், காந்தம், கெந்தகம், வகைக்கு பலம் 1, பூநீர்ச்சுண்ணம், கழஞ்சி-1, இவைகளை எலுமிச்சம்பழச் சாற்றால் 4-ஜாமம் அரைத்து வில்லைதட்டி காயவைத்து ஓட்டிலிட்டு சீலைமண்செய்து ஒரு முழக் குழியில் 50-எருவில் புடம்



போட சொந்தூரமாகும், 5 - உளுந்து நிறைமுதல் 7 - உளுந்து நிறைவரையில் கொடுக்கலாம். இரத்த விருத்தி பலஹீனம் சுர வெளுப்பு தாதுபுஷ்டி முதலியவைகட்கு தேனிலாவது லேகியங்களிலாவது கொடுக்கலாம்.

மைசூர் அரண்மனை சர்ஜன்
மஞ். ஜகந்நாத நாயுடு.

---

நெ. **938**

## இஞ்சி ஷர்ப்பத்.

இஞ்சி ரசத்தை இரண்டுமணிநேரம் அசையாமல் வைத்து தெளிவான ரசத்தை இறுத்துக் கொண்டு அந்த இடைக்கு இரண்டத்தனை சர்க்கரை சேர்த்து கலக்கி அடுப்பேற்றிக் காய்ச்சி (மதுபாகத்தில்) அதாவது தேன்போலக்காய்ச்சிவடித்து வைத்துக்கொள்ளவும் (அளவு) 1-அல்லது 2-ரூபாய் நிறை கொடுக்கலாம். பித்தசாந்தி செய்யும் இரத்தக்கெடுதலை யாற்றும் பசி தீபனமுண்டாகும், இடைக்கு இடை ஜலம் கூட்டி சாப்பிடவேண்டும். ஷை ஜகந்நாத நாயுடு.

---

நெ. **939**

## நாரத்தம்பழ ஷர்ப்பத்.

நாரத்தம்பழரசம் வேண்டியதெடுத்து அதற்கு இரட்டிப்பு இடை சர்க்கரைச் சேர்த்துக் காய்ச்சி வடிகட்டிக்கொள்ளவும். (அளவு) 2-விராகனிடை முதல் 4-விராகனிடை வரையில் எடுத்து கொஞ்சம் ஜலத்திற் கலந்து கொடுக்கலாம். பித்தம், தாகம், ஜுரம், வாந்தி, அரோசகம் இவை உள்ள காலங்களில் உபயோகிக்கலாம். ஷை ஜகந்நாத நாயுடு

---

நெ. **940**

## நன்னாரி ஷர்ப்பத்.

இடித்த நன்னாரிவேர் 2-பலம், நன்றாய் காய்ந்த வெந்நீர் 10-பலம் இந்த வெந்நீரில் ஷை நன்னாரிவேரைப் பேட்டு 1-மணி நேரம் ஊறவைத்து பிசைந்து வடிகட்டிய கஷாயத்திற்கு 12-பலம் சர்க்கரைக்கூட்டிக்காய்ச்சி தேன்பதத்தில் இறக்கி சீசாவில் வைத்துக்கொள்ளவும். 1-முதல் 2-ரூபாயிடைவரையிலும் சாப்பிடலாம். ஷை ஜகந்நாத நாயுடு.

நெ. **941**

## திராக்ஷபழ ஷர்பத்.

திராக்ஷை பழத்தைப் பிழிந்து ரசமெடுத்து அதற்கு இரண்டத் தனை சர்க்கரை சேர்த்து முறைப்படி ஷர்பத் செய்துக் கொண்டு கடைசியில் கொஞ்சம் பன்னீர் சேர்த்துக்கொள்ளவும் (உபயோகம்) பித்தச்சூடு கைகால் எரிவு இவைகளுக்கு 1-2-ரூபாயிடை கொடுக்க லாம்.

ஷை ஜகந்நாத நாயடு.

---

நெ. **942**

## மாதுளம்பழ ஷர்பத்.

மாதுளம் பழரசம் வேண்டியமட்டில் எடுத்துக் கொண்டு அந்த இடைக்கு இரண்டு பங்கு சர்க்கரை கலந்து அடுப்பேற்றி தேன் போல் பாகுபதமாய்க் காய்ச்சி வடித்து கொஞ்சம் பன்னீர் கூட்டி வைத்துக்கொள்ளவும் (உபயோகம்) சுரம், தாகம், ஊறல், மேகச் சூடு, இரத்தக்கெடுதி இவையுள்ளவர்கள் 1-2-ரூபாயிடை சாப்பிட லாம்.

ஜகந்நாத நாயுடு.

---

நெ. **943**

## பூநிம்பாதிக் கலவைச்சூரணம்.

நிலவேம்பு சூரணம் 20-துலாம், சீரகச் சூரணம் 10 துலாம் எலுமிச்சம்பழத்தோல் சூரணம் அல்லது நாரத்தம்பழத்தோல் சூரணம் 10-துலாம், ஏலச் சூரணம் 1-துலாம், கிராம்புச் சூரணம் 1-துலாம் இந்த சூரணங்கள் யாவும் மேற்சொன்ன இடைகணக் காய் தனித்தனி செய்து கலந்தபின் மறுபடியும் வடிகட்டி வைத் துக்கொண்டு தூர்ப்பலம் சுரம் விட்டபிறகு காண்கிற இரத்த வெளுப்பு நாள்பட்ட சீதபேதி இவைகளுக்கு ½-அல்லது 1-1½-விராகனிடை வரையில் கொடுக்கலாம்.

ஷை ஜகந்நாத நாயுடு.

---

நெ. **944**

## திராட்சாதி சூரணம்.

திராக்ஷை, ஏலம், கொத்துமல்லி, தவாக்ஷீரி, திப்பிலி, அதி மதுரம், சீந்தில் சர்க்கரை, ஜடாமாஞ்சி, வால்மிளகு, பேரீச்சம் பழம், சீரகம், இவைகளின் சூரணம் வகைக்குப் பலம்-1, வெள்ளை சர்க்கரை புலம் 5½ இவை யாவும் ஒன்றாய்க் கலந்து சிசா

வில் வைத்துக்கொள்ளவும் (அளவு) 1-முதல் 2 துலாம் வரையிலும் கொடுக்கலாம். கொஞ்சம் வெந்நீரிலாவது நீராகாரத்திலாவது சாப்பிடலாம் அரோசகம், தாகம், பித்தம் பித்தச்சூடு இவைகள் தீரும்.

ஷை ஜகந்நாத நாயுடு.

---

நெ. **945**

## ஏலாதிச் சூரணம்.

ஏலம், சந்தணம், அதிமதுரம், நெல்லிவற்றல், வால்மிளகு, இவைகளின் சூரணம் வகைக்கு பலம்-1. வெள்ளைச் சர்க்கரை, பலம் 2½-யாகவும் கலந்து வைத்துக்கொண்டு அக்கினிமந்தம், வயிறுப்பொருமல், வயிற்றுவலி, உஷ்ணபேதி, இருமல் இவை முதலிய ரோகங்களுக்கு ஒருவிராளிடை சூரணத்தை வெந்நீரிற் கலந்து கொடுக்கலாம். இப்படி 2-3-நாள்வரையில் கொடுக்கவும்.

ஷை ஜகந்நாத நாயுடு.

---

நெ. **946**

## கருணைக்கிழங்கு சூரணம்.

கருணைக்கிழங்குப்பொடி பலம்-12, சுக்கு, திப்பிலி, மிளகு, தான்றிக்காய் நெல்லிவற்றல் இவைகளின்பொடி வகைக்கு பலம்-1, நல்லபெல்லம் 18-பலம் எடுத்து பாகுசெய்து அதில் ஷை சூரணங்களைத்தூவி லேகியம்போல் கிளரி ஒரு விராளிடை பில்லைகளாகச் செய்து வடகம்போல் உலர்த்திவைத்துக் கொண்டு மூலரோக முடையவர்களுக்கு 1-பில்லையைப் பொடித்து 2-பலம் தயிரில் கலந்து கொடுக்கவும். இப்படி இருவேளையும் வியாதி குணப்படுமளவும் கொடுக்கலாம்.

ஷை ஜகந்நாத நாயுடு.

---

நெ. **947**

## குஷ்டம் மேகசட்டைகளுக்கு நரசிம்ஹ எண்ணெய்.

வெள்ளை கல்யாணமுருக்கன்பட்டை, பூவரசன்பட்டை, இலவங்கப்பட்டை, தனித்தனி இளநீர்விட்டிடித்துப் பிழிந்த வகை ரசம் படி-¼, பிரமதண்டுரசம். படி-¼, துத்தியிலை ரசம் படி-¼, சிறு சின்னிரசம் படி-¼, குமரிசாதம் தேங்காய்ப்பிரமாணம், வெந்தயம் பலம்-2½, தூள்செய்து சிற்றாமணக் கெண்ணெய் பலம்-59, கூட்டிக் காய்ச்சி பதத்தில் வடித்து பூரம் பலம்-½, சேர்த்தரைத்து வேளைக்கு ஒரு ரூபாய் எடையாகக்கொண்டு வெந்நீர்சாதம்புசிக்க நாள்-5-7 மறுபத்தியம் அரையுப்பு சுட்டபுளி சேர்க்கவும்.

அ. அருணசல முதலியார்.

நெ. **948**

## குஷ்டம் கிரந்திகளுக்கு சிவசத்திலேகியம்

சுத்திசெய்த ஆமலககெந்தி பலம்-8, பாலேகூதம் பலம்-4, இரண்டையும் கூட்டி இரண்டு ஜாமம் அரைத்து எடுத்து சீனிசர்க்கரை பலம்-24, ஏலம் கிராம்பு சாதிக்காய் சாதிபத்திரி அதிமதுரம் ஓமம் சித்தரத்தை மிளகு வாலுளுவை சுக்கு சித்திரமூலப்பட்டை திப்பிலி வகைக்கு பலம்-1, பொன்வறலாக வறுத்து சூரணம்செய்து கூட்டி நல்ல தேனைக்காய்ச்சி அழுக்கை நீக்கி சுடுகையில் தானே முன்தினுசுகளை யிட்டுப்பிசைந்து லேக்கியப்பதமாகச் செய்து கொண்டு வேளைக்கு அரை தோலா விதம் இருவேளையாக ரோகநிதானத்திற் கேற்க $\frac{1}{4}$,$\frac{1}{2}$, அல்லது ஒரு மண்டலம் கொடுக்க உப்பு புளி கரப்பன் நீக்கிய ஆகாரம். குட்டம், கெர்ப்பநோய், கிரந்தி; பக்க பவுத்திரம், கொடிபவுத்திரம், கண்டமாலே, வாதநோய்கள்தீர்ந்து தாது வலிவாகும். முத்தெண்ணெய் ஸ்நானம். ஷை யார்.

நெ. **949**

## வெள்ளை அபிரேக்குச் சுன்னம்.

சிறு குடுவையில் ஒரு பலம் பொட்டுப்பை அடியில்பாதி பரப்பி ஒருபலம் அபிரேக்கைவைத்து மீதி பாதி உப்பையிட்டு வாய்ப்புறம் புளியாரை யிலேயை அடைத்து ஒடுமூடி அரைகஜ புடமிடச் சுன்னமாகும். வெண்ணெயில் கொடுக்க நீர்ச்சுருக்கு அழல் தீரும். ஷை யார்.

நெ. **950**

## வெள்வங்க பஸ்பம்.

சுத்திசெய்த வெள்வங்கத்தை தகடாகச்செய்து பொடியாகக் கத்தரித்து வைத்துக்கொண்டு நொச்சியிலேயை ஒன்றி ரண்டா யிடித்து உலர்த்திய பொடியை சதுரமான கோணிப்பட்டையில் இரண்டுவிரல்கனம் பரப்பி வங்கப் பொடியைத்தூவி அதின்மீது மூலிகை தூளைத்தூவி தலையணைபோல் சுருட்டிக் கட்டி 5-படி உமி மத்தியில்வைத்து நெருப்பிடவும். நன்றாக ஆறியபிறகு பொரிந்திருப் பவைகளையெடுத்து அரைத்து வேகாமல் நின்றவைகளை நீக்கி பற் பமாயிருப்பதை யெடுத்து வெண்ணெயில் உபயோகப்படுத்தவும். மேகம், வெள்ளை தீரும். ஷை யார்.

நெ. **951**

## மேகங்களுக்குப் பேரண்ட பஸ்பம்.

பால்போலிருக்கும் அண்ட ஓட்டை பூநீரில் கொதிப்பித்து கழுகியெடுத்து எருமைச்சாணி அடை மத்தியில் வைத்து ½-கஜ புடமிட்டு 4-க்கு 1-பூரம் சேர்த்து வாய்நீரா லரைத்து பில்லை உலர்த்தி ½-கஜ புடமிட்டு பணவிடையாக தேனில் ½-மண்டலம் கொடுக்க செம்மேகம் தீரும். ஷை யார்.

---

நெ. **952**

## அமுரிசிலைகெந்தி பஸ்பம்.

கரும்பில்லாஞ்சி யிலையை அரைத்து அதற்குள் வைத்து சீலை செய்து 3-வரட்டியில் புடமிட்டு குன்றிமணியிடை வெண்ணெயில் கொதிக்க கொதிப்புகள் நீங்கும் ஷை யார்.

---

நெ. **953**

## பாலைரூத செந்தூரம்.

சிறிய குடுவையில் கால்பலம் நெல்லிக்காய் கெந்தியைப் பொடித்து பாலைரசம் பலம் ஒன்றுக்கு கீழ்மேலுமிட்டு ஓடு மூடி சீலை செய்து மூன்றெருவில் புடமிட்டு அரிசியிடை தேனிலிட வாத சுரம் தீரும். ஷை யார்.

---

நெ. **954**

## அன்னபேதி செந்தூரம்.

மான்செவி கள்ளியிலை ரசத்திலரைத்து பில்லை 10-எருவில் புடம்போட்டு தேனிலிட வாயு வீக்கம் தீரும். ஷை யார்.

---

நெ. **955**

## பலகரை சங்குசுண்ணம்.

குடுவையில் எலுமிச்சம்பழ ரசத்தில் 3-நாள் ஊறி அப்படியே ½-கஜ புடமிட்டு பழரசத்தில் கொடுக்க வயிற்றுவலி தீரும். ஷை யார்.

---

நெ. **956**

## முத்துசிப்பி சுண்ணம்.

வீரம் குன்றி, பாஷாணம் குன்றி, இரண்டையும் உமிழ்நீரா லரைத்து 1-பலம் சிப்பிக்கு தடவி உலர்த்தி ஓட்டில் வைத்து ½-கஜ

புடமிட்டு எடுத்து திப்பிலி பலம்-1, திப்பிலி மூலம், சீரகம், சுக்கு, ஏலம், சிறுதேக்கு, வாயுவிளங்கம், கடுக்காய், மிளகு, வகைக்கு பலம்-½, இளவறுப்பு சூரணஞ்செய்து சர்க்கரை பலம்-1½, கூட்டி தேனைக் காய்ச்சி அதிலிட்டுப் பிசைந்து கெச்சக்காய்ப் பிரமாணத்தில் முன்சுண்ணம் 2-அரிசி இடை வைத்து சாப்பிட்டு வரவும்.

ஷை யார்.

---

## நெ. 957

### சிற்றண்டம்.

அண்டத்தை சிறிய துவாரமிட்டு அதினுள் 20-துளி உத்தாமணி பால்விட்டு குப்பைமுள்ளிக் கீரையைக் கவசமிட்டு மண்சீலை செய்து 10-வரட்டியில் புடம் வைத்து எடுத்து தேனிலிட சீதளச் சுரம் தீரும்.

ஷை யார்.

---

## நெ. 958

### சகல வாயுகளுக்கும் வாதமாருத மெழுகு.

பரங்கிச்சக்கை பலம்-4, கடுக்காய் தோல் பலம்-4, திரிகடுகு சித்துபூா பட்டை சித்திரமூல பட்டை, வகைக்கு பலம்-2, கசகசா பலம்-1, கார்போக அரிசி விழலரிசி வெப்பாலரிசி வகைக்கு பலம்-½, சாதிக்காய் சாதிபத்திரி ஏலம் லவுங்கம் சித்தரத்தை வால்மிளகு அதிமதுரம் வகைக்கு பலம்-¼, சூரணம் செய்யவும். கோரோசனம் குங்குமப்பூ வகைக்கு பலம்-¼, தாளகம் பலம்-¼, வீரம் பலம்-¼, லிங்கம் பலம்-¼, பூரம் பலம் ½, ரசச்செந்தூரம்பலம்-½, இவைகளை முன்னதாக அரைத்து யாவும் ஒன்றாகக்கூட்டி திரிபலாதி கியாழத்தால் 4-ஜாமம் அரைத்து நிழலிலுணர்த்தி தேனால் 3-ஜாமம் அரைத்து மிளகு பிரமாணம் பனைவெல்லத்தில் வைத்து இருவேளையும் கொடுக்க. புளியுதவாது நெய், வெள்ளாட்டு வற்றலாகும். தீரும் வியாதிகள்:—முடக்கு வாதம், சூலை, மேகவாயு, பாண்டுவலி, குடல் வாயு, சூலைவாயு, மண்டலவாயு, சூதகவாயு, அற்புதவாயு, முசல் வாயு, மூர்ச்சைவாயு, பித்தவாயு, பாரிசவாயு, திமிர்வாயு இவைகளெல்லாம் தீரும்.

ஷையார்

---

## நெ. 959

### கூழ்ப்பாண்ட லேகியம்.

வெப்பந்தணிந்து தேகம் தணியும்.

ஒரு சாம பூசுணிக்காயின் மேல்தோலும் விரைச்சாறையும் நீக்கி மற்றதைத் துண்டுகளாக்கி 1¼-படி ஜலம் விட்டு வேகவைத்து

ஜலம் வடித்துக்கொண்டு தண்ணீரும் சதையுமிடைக்கு இரண்டிடை சர்க்கரைகூட்டி பாகெடுத்து சதையை கடைந்திட்டு கற்புஸ்விரை பருப்பு-4, பூனைக்காலிவிரை-2, லால்முசிலி-1, சபேத்மிசிலி-1, குஸ் சேதுசாலம்-2, வேலன் கோந்து-2, முருக்கன் பிசின்-2, வெங்காய விரை-1, சல்கம்விரை-1, நீர்முள்ளிவிரை 1, முள்ளங்கிவிரை-1, சிறு நாகப்பூ-1, தூதரிசுருக்-1, தூதரிசுபேத்-1, இலவங்கப்பட்டை-1, இவை நிறை தோலாக்கள் சூரணமிட்டு கிளரி வேளைக்கு ½-தோலா வீதம் சாப்பிடவும். மீன்வகை நீக்கவும். ஷை யார்.

நெ. **960**

## பக்கசூலை கெர்ப்பசூலைக்கு எண்ணெய்.

முத்தெண்ணெய் பலம்-12, ஜலம்விட்டு இடித்து எடுத்த மிளக ரணையிலைரசம் பலம்-12, பூண்டுதிரி பலம்-4, கூட்டி காய்ச்சிவடித்து ஆளுக்குதக்கபடி 3-நாள் கொடுத்துவர ஆகும். பேதி வெளுப்பாக இருந்தால் நோய் நீங்கிய குறிப்பாம் இச்சா பத்தியம். ஷையார்.

நெ. **961**

## சிவஞரமிர்தம்.

கெந்தி சூதம் நாபி பொரித்தவெண்காரம் மனோசிலை திரிகடுகு வகைக்கு விராகனிடை-1, முன்னதாக சூதமும் கெந்தியையு மரைத்து மற்றதினுசுகளையும்கூட்டி 4-ஜாமம் அரைத்து பத்திரப் படுத்தி சுரம், சீதளம், தலைவலி, தலைபாரம் இவைகளுக்கு நசியம் கலிக்கமுமிட்டு தேனில் உள்ளுக்கு கொடுக்கவும். ஷை யார்.

நெ. **962**

## சன்னிகளுக்கு உருக்குமாத்திரை.

லிங்கம் வீரம் பூரம் சூதகம் லிங்கதொட்டி வகைக்கு விராக னிடை-1, இவைகளை அண்டவெள்ளைக்கருவில் மஞ்சளிட்டுதெளிந் தநீரால் 4-ஜாமம் அரைத்து கோதுமைபோல் மாத்திரைசெய்து உலர்த்தி வெற்றிலைத்துண்டுகளில் ஒவ்வொன்றாய் வைத்து நூலால் கட்டி ஓலைச்சுருளுக்குள்வைத்து மேலே மணலால்மூடி அதின்மீது 15-வரட்டியில் புடமிட்டெடுக்க உருக்கு மாத்திரையாக இருக்கும். தக்க அனுபானங்களில் இழைக்கவும். ஷை யார்.

நெ. **963**

### பசிதீபனத்திற்கு.

ஓமம் பலம்-1, குருசாணி ஓமம் பலம்-1, நாய்க்கடுகு பலம்-1, தூள்செய்து ஒன்றரைபலம் பனைவெல்லத்தில் பிசைந்து புங்கன் கொட்டைப் பிரமாணம் புசிக்கவும். ஷை யார்.

நெ. **964**

### சிரஸ்தான தைலவகை.

கூர்எள்ளெண்ணெய் படி-½, அகத்திக்கீரை ரசம் படி-½, கூட்டி ரவியில் வைத்து மறுநாள் கோஷ்டம் பலம்-1, அரைத்திட்டு காய்ச்சி வடித்து ஸ்நானம் செய்துவரவும். குளிர்ச்சி தரும். ஷை யார்.

நெ. **965**

### எள்ளெண்ணெய் தைலம்.

எள்ளெண்ணெய் பலம்-40, நிலவிளாமிலே விளாங்காய்ப் பிரமாணம், வில்வபழம்-1, பசும்பாலில் அரைக்கவும், சீரகம் பலம்-1, முலைப் பாலில் அரைக்கவும் கூட்டிகாய்ச்சி வடித்து ஸ்நானம்செய்து வர சாலேசுரம் தீரும். ஷை யார்.

நெ. **966**

### வில்வப்பட்டை தைலம்.

வில்வப்பட்டை பலம்-12½, இதை படி ஜலத்தில் போட்டு எட்டொன்றாகக் காய்ச்சி வடித்து ஸநானம் செய்துவர பித்தம் உஷ்ணம் மேகம் இரும்பல் மூலரத்தம் நீங்கி கண் தெரியும்.

ஷை யார்.

நெ. **967**

### வேங்கைத்தூள் தைலம்.

வேங்கைப்பட்டைத்தூளை முன்போலவே கியாழம் வடித்து விலாமிச்சு பலம்-1, எள்ளெண்ணெய் பலம்-15, கூட்டிக் காய்ச்சி வடித்து முழுகிவர மண்டையிடி, வீக்கம், பீனிசம், வாதம் நீங்கி காந்தியுண்டாகும். ஷை யார்.

நெ. **968**

### வெட்டிவேர் தைலம்.

வெட்டிவேர் பலம்-10, முன்போல கியாழம் வடித்து எள்ளெண்ணெய் பலம்-15, பாலிலரைத்து அதிமதுரம் பலம்-1

கூட்டிக் காய்ச்சி வடித்து முழுகிவர பீனிசம்-மண்டைசூலை-குட்ட சொரி-புறநீர் கோர்வை-கண்புகைச்சல்-கால் நோய் தீரும்.

ஷை யார்.

---

நே. **969.**

## வேம்புபட்டை தைலம்.

நாள்சென்ற வேம்பு பட்டை பலம்-25, 5-படி ஜலத்தில் எட்டொன்ருகக் காய்ச்சி கியாழம் வடித்து எள்ளெண்ணெய் பலம்-30, ஏலம் பலம்-1, இட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவர சூலை-குட்டரோகம்-தழுதளை-கடுப்பு-செங்கரப்பன் புரைகள் தீரும்.

ஷை யார்.

---

நே. **970.**

## சித்திர மூலவேர் பட்டை தைலம்.

சித்திர மூலவேர் பட்டை பலம்-10, 2½-படி ஜலத்தில் எட்டொன்ருகக் காய்ச்சி வடித்து எள்ளெண்ணெய் பலம்-15, பசும் வெண்ணெய் பலம்-2, சீரகம் பலம்-1, காய்ச்சி வடித்து முழுக ஆனந்தவாயு-ஸ்திரீமேகம்-சிறுசொரி - குட்டம்-அரையாப்பு-கிரந்தி-சூலை-புண்-வீக்கம் தீரும்.

ஷை யார்.

---

நே. **971.**

## சீரகத் தைலம்.

சீரகம் பலம்-24, 8-படி ஜலத்தில் எட்டொன்ருகக் காய்ச்சி வடித்து எள்ளெண்ணெய் பலம்-100, கார்போகரிசி பலம்-2, இட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவர 8-வித குன்மம், பித்தம், கிறுகிறுப்பு, ஊஷ்ணம், கபாலச்சூடு நீங்கும்.

ஷை யார்.

---

நே. **972.**

## கீழாநெல்லி சமூலம்.

கீழாநெல்லி சமூலம் பலம்-25, எட்டுக்கு ஒன்ருகக் காய்ச்சி வடித்து எள்ளெண்ணெய் பலம்-100, சர்க்கரை பலம்-5, காய்ச்சி வடித்து முழுக பித்தம் யாவும், தலைசுற்று, வாய் நீரூறல், ஊஷ்ணம், கைகால் எரிவு நீங்கும்.

ஷை யார்.

---

நே. **973.**

## கரிச்சாலைத் தைலம்.

கரிச்சாலை ரசம் படி-1, நெல்லிக்காய் ரசம் படி காலே வீசம் எள்ளெண்ணெய் படி-1, சாதிக்காய் பலம்-1, காய்ச்சி வடித்து முழுகிவர தலை, செவி ரோகம்-பித்தம்-ஊஷ்ணம்-பீனிசம் தீரும்.

ஷை யார்.

### நே. 974.

### பித்தவெட்டைக்கு எண்ணெய்.

சிற்றாமணக்கு எண்ணெய் படி-1, பழரசம் படி-¼, இலந்தை ரசம் படி-¼, வெங்காயம் படி-¼, கருஞ்சீரகம் பலம்-2, குமரிசாதம் பலம் 1, கூட்டிக் காய்ச்சி வடித்து கரண்டி வீதம் கொடுக்க 18-வித கணச்சூடு, அஸ்திசுரம், வெட்டை வரட்சி தீரும். ஷை யார்.

---

### நே. 975.

### கண்சூடு 18-க்கும் எண்ணெய்.

முத்தெண்ணெய் படி 1, குமரிசாதம் தேங்காய் பிரமாணம், வெந்தயம், பலம் ¼, வெங்காயம் பலம் 10, சிறுக அரிந்திட்டு காய்ச்சி வடித்துக் கொடுக்கவும். ஷை யார்.

---

### நே. 976.

### கணமாந்த தோஷ எண்ணெய்.

சிற்றாமணக்கு எண்ணெய் படி 1, குமரிஜலம் படி ¼, பழரசம் படி ¼, வெங்காய ரசம் படி ¼, பசும்பால் படி ½, கோஷ்டம்-மதுரம் சண்பகப்பூ-ஏலம்-சிறுலவங்கப்பட்டை வகைக்குப் பலம் ¼, வெந்தயம் பலம் 1, அரைத்திட்டுக் காய்ச்சி வடித்துக் கரண்டி வீதம் கொடுக்கவும். ஷை யார்.

---

### நே. 977.

### வாதசுரக்குறி.

முகமும் உதடுங் கறுத்துக் காணல், சரீர மெல்லாங் தடித்து நோதல், மெய்நடுக்கல், உடம்பு திமிரெடுக்கல், தேகம் பாரித்திருத்தல், மலபந்தமாயிருத்தல். தேகம் குளிர்ந்து மயிர்க்கூச்செறிதலுமா யிருத்தல், தலைநோயுண்டா யிருத்தல், இவை வாதசுரக்குறிப்பென்றறிக.

சைதாபுரம். காசி விஸ்வநாத முதலியார்.

---

### நே. 978.

### பித்த சுரக்குறி.

நித்திரை மெத்தக்காணல், மலமூத்திரஞ் செவந்திருத்தல், வயிறு கழிந்திடுதல், வாந்தியுண்டாகுதல், வாய்பிதற்றல், வாதாடுதல், மூர்ச்சை, தாகம், எழுந்திருந்து ஓடல், விக்கல், தவித்திடல், சாந்தப்படுதல், இவை பித்தசுரக் குறிப்பென்றறிக.

ஷை யார்.

நெ. **979**

## சிலேத்தும சுரக்குறி.

நாக்கும் முகமும் கறுத்துக்காணல், மார்புநோதல், இரைப்பிரு மல், உருசியில்லாதல், மூச்சுவிடப் போகாமல் மயங்குதல், விக்கல், தாகம், மிடர்நோதல், மேல்மூச்சிடல், தினவெடுக்கல், தியங்கிடல் இவை சிலேத்தும சுரக்குறி யென்றறிக.

சை. காசி விஸ்வநாத முதலியார்.

நெ. **980**

## வாத பித்த சுரக்குறி.

அங்கமெல்லாம் அசதியாதல், நாக்குக்கறுத்துக்காணல், பிரலா பித்தல், நித்திரையாதல், மலபந்தமா யிருத்தல், மலம் வெளுத்தல், வாய்கைத்தல், வடிவுகுன்றல், நினைந்துமறத்தல், தியங்கிடுதல், மயங் கிடுதல் இவை வாதபித்த சுரக்குறி யென்றறிக. ஷை யார்.

நெ. **981**

## தொந்த சுரக்குறி.

தேகமெல்லா நோதல், சுவாசங்காணல், இருமல், வெளுத்த நாக்கு, மயிர்கூர்ச்சிடுதல், மிடர்நோதல், தாபமிகவுண்டாதல், தயங்கி சஞ்சலித்தல், வாய் பிதற்றல், தேகம் வழுவழுத்திடல், வேர்வை மிகவுண்டாதல், வாய்கைத்தல், நித்திரைமிகல், மார்நோதல், தலைவலி, பிடரி வலித்தல், நாக்கு வழுவழுத்தல், நாக்கு மூக்கு நலமழித்தல், இவை தொந்த சுரக்குறி யென்றறிக. ஷை யார்.

நெ. **982**

## அஜீரண சுரக்குறி.

இளைப்பு, விக்கல், வயிறு மந்தம், மார்பு தடை குரல் நோதல், புளியேப்பம், வாந்தி, தாகம், மூச்சு, வயிறுநொந்து பொருமிக் கொள்ளல், உடம்பெங்கும் திமிராதல் இவை அஜீரணக் குறி யென்றறிக. ஷை யார்.

நெ. **983**

## அபிகாத சுரக்குறி.

அதிக நடையாலும், குதிரை - யானை ஏறி நடத்தியதாலும், சுமையெடுத்தலாலும், அதிகமாய் வேலைசெய்தலாலும், பனியில் சஞ்சரித்தலாலும் உண்டாகிய திமிர், தாகம், இளைப்பு, கைகால்

தளர்ந்திடுதல், உடம்பெல்லாம் நோதல், மாருதவேர்வையுண்டாதல், பிரமிக்குதல், குளிர்ந்த போசனத்தில் ஆசையுண்டாதல், இவை அபிகாத சுரக்குறியென்றறிக. ஷை யார்.

ரெ. 984

இவைகளுக்கு மாத்திரைகள்.

சுராங்குசம்.

நாபி, பாதரசம், கந்தகம். சுக்கு, திப்பிலி, மிளகு, இலவங்கம், இவைகளைச் சமபாகமாய் கலுவத்தில் போட்டு எருக்கம்பாலால் ஒரு நாள் வரையிலும் அரைத்து மற்று நாள் கடுக்காய், தான்றிக் காய், நெல்லிக்காய் இவைகளை சமபாகமாக கஷாயம் வைத்து எட்டி லொருபங்காய் இறக்கிக்கொண்டு இந்தக் கஷாயத்தினுல் நான்கு சாமம் அரைத்து குண்டுமணிப் பிரமாணம் மாத்திரை செய்து உலர்த்தி காடகத்தி லடைத்து வைத்துக்கொள்ளவும்.

ஷை யார்.

ரெ. 985

அக்கினி குமாரம்.

ஊமத்தைவிரை விராகனிடை-2, பாதரசம் விராகனிடை $1\frac{1}{2}$, கந்தகம் விராகனிடை-3, திப்பிலி விராகனிடை-6, சுக்கு விராக னிடை-9, இவைகளைச் சேர்த்துக் கலுவத்திலிட்டு செம்பருத்தி யிலை ரசம்விட்டு 12-ஜாமம் அரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரை செய்து நிழலி லுலர்த்தி காடகத்தில் அடைத்து வைக்கவும்.

ஷை யார்.

ரெ. 986

பிரசண்டபானு ரசம்.

வெண்காரம் விராகனிடை-4, நாபி விராகனிடை-2, இங்குலி கம், விராகனிடை-3, இலவங்கம் விராகனிடை-5, சித்திர மூலம் விராகனிடை4, இவைகளைச் சேர்த்து கலுவத்திலிட்டு எலுமிச்சம் பழ ரசத்தினுல் ஆறுஜாமம் மர்த்தனஞ் செய்து குண்டுமணிப் பிர மாணம் மாத்திரைசெய்து வைத்துக் கொள்ளவும். ஷை யார்.

ரெ. 987

பூபதி.

இரும்பு அரப்பொடி விராகனிடை-2, இங்குலிகம் விராக னிடை-2, நாபி விராகனிடை-2, மிளகு விராகனிடை-2, கச

கசா விராகனிடை-4, இவைகளைச் சேர்த்து சுக்கு - திப்பிலி - மிளகு - கஷாயத்தினல் 12 ஜாமம் மர்த்தனஞ்செய்து குண்டு மணிப்பிரமாணம் மாத்திரை செய்து வைத்துக் கொள்ளவும்.

ஷை யார்.

நெ. **988**

## ரஞ்ஞந்தகதாள கேசுரம்.

பாதரசம் விராகனிடை-3, கந்தகம் விராகனிடை-15, மனேசிலை விராகனிடை-8, கடுகுரோகணி விராகனிடை-6, திப்பிலி விராகனிடை-3, இவைகளை ஒன்ருகக்கூட்டி பசும்பாலில் ஒருஜாமம் அரைத்து கண்டங்கத்திரி பழ ரசத்திஞல் அரைத்து உளுந்து பிரமாணம் மாத்திரை செய்து வைத்துக்கொள்ளவும். ஷை யார்.

நெ. **989**

## லகு அக்கினிகுமாரம்.

சுக்கு, திப்பிலி, மிளகு, தாளிசபத்திரி, இலவங்கம், வெண்காரம், நாபி இவைகளைச் சமபாகமாகக் கலுவத்திலிட்டுப் பொடி செய்து எருக்கம் பழுப்பு ரசத்திஞல் அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைசெய்து வைத்துக்கொள்ளவும். ஷை யார்.

நெ. **990**

## லகு சுராங்குசம்.

திப்பிலி விராகனிடை-2, கந்தகம் விராகனிடை-3, மனேசிலை விராகனிடை-2, தாளகம் விராகனிடை-1, அப்பிரேகம் விராகனிடை-2, இங்குலிகம் விராகனிடை-2, இவைகளைச்சேர்த்து சித்திரமூல கஷாயத்திஞல் மூன்றுஜாமம் மர்த்தனஞ் செய்து பின்பு எலுமிச்சம்பழ ரசத்திஞல் இரண்டு ஜாமம் மர்த்தனஞ்செய்து மிளகு பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

ஷை யார்.

நெ. **991**

## வாதசுரத்துக்குக் கஷாயம்.

கண்டங்கத்திரிவேர், மூக்கிரட்டைவேர் சுக்கு, திப்பிலி, மிளகு, சித்திரமூலம், பரங்கி, சன்னராஷ்டம் இவைகளைச் சமபாகமாகச் சேர்த்து கஷாயம் வைத்து எட்டிலொன்ருய் இறக்கிக்கொண்டு ½-பலம் கஷாயத்தில் மேற்படி அக்கினிகுமார மாத்திரையி

லொன்றை இழைத்து இரண்டுவேளையும்மூன்று நாள் கொடுக்கவும். இதற்குப் பத்தியம் அரைபுளிப்பிட்ட மிளகுநீர் துவரை துவையல் கடுக்காய் துவையல் இவைகள் ஆகும். ஷை யார்.

---

## நெ. 992

### இதில் நீராவிடில் வேறொரு முறை.

காலைப்பொழுதில் சன்னதும்பராஷ்டம் வெந்நீர் விட்டரைத்து ரசம்பிழிந்து இரும்புக் கரண்டியில் அஞ்சுதரம் பொங்கவைத்து வடிகட்டி ½-பலம் ரசத்தில் மேலெழுதிய சுராங்குச மாத்திரையை இழைத்துக் கொடுக்கவும். சாயுங்காலம் இதற்குமுன் சொல்லிய கஷாயத்தில் மேற்படி மாத்திரையிலொன்றை யிழைத்து மூன்று நாள் கொடுக்கவும். ஷை யார்

---

## நெ. 993

### வாத சயித்தியசுரத்திற்கு சுரசம்.

மாவிலிங்கம்பட்டை, முருங்கப்பட்டை, வெட்பாலைப் பட்டை, இஞ்சி, மூக்கரட்டை, இவ்வைந்தையும் ஓர் சமபாகமாய் வெந்நீர்விட்டரைத்து ரசம் வாங்கி ஏழுதரம் இரும்புக்கரண்டியில் பொங்கவைத்து ½-பலம் ரசத்தில் ரணுந்தகதாளகேசுரம் மாத்திரை யிழைத்து இரண்டுவேளையும் ஐந்துதினங் கொடுக்கவும். பத்தியம் பொரிச்சாறு துவரம்பருப்புத் துவையல் இவைகள் ஆகும். ஷை யார்.

---

## நெ. 994

### பித்தசுரம்.

கோரக்கிழங்கு, பற்படாகம், கொத்தமல்லிவிரை, சுக்கு, சீந்தில்கொடி, வெட்டிவேர், நரிபயிறு செடிசமூலம் கஷாயம் வைத்து ½-பலம் கஷாயத்தில், லகு அக்கினிகுமாரம் மாத்திரை யிழைத்து இரண்டு பொழுதும் மூன்றுநாள் கொடுக்கவும். பத்தியம், சாத்தமுது, பயறு, இஞ்சி, கடுக்காய் துவையல்கள் கத்தரிக்காய்ப்பிஞ்சு, அரைக்கீரை சேர்த்துக் கொள்ளவும்.

ஷை யார்

---

## நெ. 995

### பித்தசீதள சுரத்துக்குச் கஷாயம்.

ஆடாதொடைசமூலம், சுக்கு, திப்பிலி, மிளகு, விஷ்ணுகிராந்தி, ஓட்டறை, நல்ல துளசி, நாய்த் துளசி, மூங்கி லிலை, இவைகளைச் சமபாகமாய்க் கஷாயம் வைத்து ½-பலம் கஷாயத்

தில் பிரசண்டபானு மாத்திரை யிழைத்து ஒன்பது பொழுது கொடுக்கவும். பத்தியம் புளி தள்ளவும். ஷை யார்.

## நே. 996
### அஜீரண சுரத்துக்குக் கஷாயம்.

ஓட்டறை, சுண்ணாம்பு கடுகு, வாழைச்சருகு, புளியம்பட்டை, வசம்பு, எருக்கம்பூ, இவைகளைச் சாம்பலாக்கி இந்தச் சாம்பலில் ¼-பலம் எடுத்து ஒரு சட்டியிற்பெய்து ஆடாதோடை, மிளகரணை, சங்கம்வேர் இம்மூன்றையும் சமபாகமாய் இடித்து மேற்படி சாம்பலோடு சேர்த்து அரைபடி சலம் விட்டு எட்டிலொரு பாகமாக காய்ச்சி அரைபலம் கஷாயத்தில் ரணந்தக தாளகேசுர மாத்திரையை யிழைத்து இரண்டு பொழுது மூன்றுநாள் கொடுக்கவும். ஷை யார்.

## நே. 997
### அபிகாத சுரத்துக்குக் கஷாயம்.

மரமஞ்சள், மலைவேம்பு, திப்பிலி, சித்திரமூலம், கறிமஞ்சள், மூங்கிலிலை, ஆடாதோடை, சங்கம்வேர் எருக்கம்வேர், பனைவேர், புங்கம்பட்டை, சன்ன தும்பராஷ்டம், அழிஞ்சில் வேர், இவைகளைச் சமபாகமாகச் சேர்த்து கஷாயம் வைத்து அரைப்பலம் கஷாயத்தில் மேற்படி மாத்திரைகளில் ஒவ்வொன்றெடுத்து இழைத்து இரண்டு பொழுதும் இரண்டுநாள் கொடுக்கவும். பத்தியம் அரை புளிப்பு துவரை, நார்த்தங்காய், அரைக்கீரை, இவைகள் ஆகும். ஷை யார்.

## நே. 998
### தொந்த சுரத்துக்குக் கஷாயம்.

பரங்கி, சன்ன தும்பராஷ்டம், சுக்கு, திப்பிலி, மிளகு, செவ்வியம், சித்திரமூலம், மூங்கிலிலை, நீர்முள்ளி, முருங்கைவேர், மரமஞ்சள், சாம்பிராணியிலை, சங்கம்வேர், புனல்தண்டு, சீந்தில்கொடி, அருகம்வேர், விஷ்ணுகிராந்தி, நாய்த் துளசி, நல்ல துளசி, தென்னம்பூ, மூக்கிரட்டைவேர் இவைகளைக் கஷாயம் வைத்து மேற்படி மாத்திரைகளில் ஒவ்வொன்றிழைத்து இரண்டுவேளையும் எட்டு நாள் கொடுக்கவும். பத்தியம் அரைபுளி, கடுக்காய், துவரை, நாரத்தங்காய் கூட்டிக் கொள்ளவும். ஷை யார்.

## நே. 999

### கண்டவுஷதம்.

பொன்-வெள்ளி-முத்து-சுக்கு-பவளம்-பித்தளை-இரும்பு, ருத்திராக்ஷம்-ஆமை ஓடு-கிராம்பு-திப்பிலி-கோஷ்டம்-அக்கிரா காரம் கலைமான்கொம்பு-ஆடாதோடை மூலம்-காவிக்கல்-நாகம் - திப்பிலி-அதிமதுரம்-மிளகு-மரமஞ்சள் - பெருங்காயம் இவைகளை முலைப் பாலில் உரைத்து கொஞ்சம் தேன்விட்டு நாக்கில் தேய்க்கவும்.

ஷை யார்.

## நே. 1000

### ஆரோக்கிய ஸ்நானம்.

ஓமம் - மஞ்சள் - மிளகு வேப்பிலை - இவைகளை பசும் பாலில் அரைத்து தலையில் தேய்த்து ஸ்நானஞ்செய்து சாம்பிராணி தூபம் போடவும். ஷை யார்.

## நே. 1001

### ஸ்நானத்துக்குத் தைலம்.

நல்லெண்ணெய் படி-$\frac{1}{4}$, பசும்பால் படி-$\frac{1}{4}$, கருஞ்செம்மையிலை ரசம் படி $\frac{1}{4}$, கருநொச்சியிலை ரசம் படி-$\frac{1}{4}$, முத்தப்புளியிலை ரசம் படி-$\frac{1}{4}$, கரிசலாங்கண்ணிரசம் படி-$\frac{1}{4}$, இவைகளைச் சேர்த்து ஒரு நாள்வரையில் வெய்யிலில்வைத்து மறுநாள் தைலப்பக்குவமாய்க் காய்ச்சி இறக்கும்போது வடிகலசத்தில் கஸ்தூரிமஞ்சள் விராகனிடை-4, குங்குமப்பூ, விராகனிடை-1 மிளகு பலம் $\frac{1}{2}$, இவைகளைப் பொடி செய்து போட்டு தைலத்தை வடித்துக்கொள்ளவும்.

ஷை யார்.

## நே 1002

### வேறொரு முறை.

நல்லெண்ணெய், விளக்கெண்ணெய், நெய், பசும் பால், பொன்னாங்காணிரசம் இவைகளைச் சமபாகமாகச் சேர்த்து தைலபக்குவமாகக் காய்ச்சி இறக்கும்போது வடிகலசத்தில் கஸ்தூரி மஞ்சள்-இச்சிலிக்கிழங்கு-மிளகு-இம் மூன்றுஞ் சமபாகமாய்ப் பொடிசெய்து போட்டு தைலத்தை வடித்துக் கொள்ளவும். ஷை யார்.

நெ. 1003

## உடம்பு தேறுகிறதற்குக் கண்டாத்திரி லேகியம்.

இஞ்சி-$\frac{1}{2}$ வீசை கொண்டுவந்து மேற்பாணையைச் சீவிப்போட்டு மெல்லிசாய் குண்டுமணிப் பிரமாணம் ஒரேவிதமாய் அறுத்து நிழலில் உலர்த்தி இதனுடன் சேரும் வகைகள், மிளகு பலம்-$\frac{1}{2}$, சடாமஞ்சி பலம்-$\frac{1}{2}$, எஷ்டிமதுக்கம் பலம்-$\frac{1}{2}$, கோஷ்டம் பலம்-$\frac{1}{2}$, மஞ்சிஷ்டி பலம்-$\frac{1}{2}$, ஓமம் பலம்-$\frac{1}{2}$, திப்பிலி பலம்-$\frac{1}{2}$, மிளகு பலம்-$\frac{1}{2}$, சுக்கு பலம்-$\frac{3}{4}$, வெட்டி வேர் பலம்-$\frac{1}{4}$, குருவேர் பலம்-$\frac{1}{4}$, இலவங்கம் பலம்-$\frac{1}{4}$, கடுக்காய் பலம்-$\frac{1}{4}$, நெல்லி பருப்பு பலம்-$\frac{1}{4}$, தான்றிக்காய் பலம்-$\frac{1}{4}$, சித்திரமூலம் பலம்-$\frac{1}{4}$, வால்மிளகு பலம்-$\frac{1}{4}$, கொத்தமல்லி விரை பலம்-$\frac{1}{4}$, சாதிக்காய் விராகனிடை-1, மூங்கில் உப்பு பலம்-$\frac{1}{4}$, சாதிபத்திரி விராகனிடை-1, சன்னலவங்கப்பட்டை பலம்-$\frac{1}{4}$, லவங்கப் பத்திரி பலம்-$\frac{1}{4}$; சந்தனக்கட்டை பலம்-$\frac{1}{4}$, கருங்காலிப்பட்டை பலம்-$\frac{1}{4}$, கற்கண்டு பலம்-$\frac{1}{2}$, திராட்சப்பழம் பலம்-$\frac{1}{2}$, பேரீச்சங்காய் பலம்-$\frac{1}{2}$, தேன் பலம்-3, நெய் பலம்-6, சர்க்கரை வீசை-$\frac{1}{2}$, மேற்கண்டவைகளில் மூங்கிலுப்பு, சாதிபத்திரி, சாதிக்காய், லவங்கம், திராக்ஷப்பழம், கற்கண்டு, பேரீச்சங்காய் இவைகளைப் பிரித்து மற்றவைகளையிடித்து வஸ்திரகாயஞ்செய்து மேல்பிரித்து வைத்தவைகளை கல்வத்தில் பொடிசெய்து மேலே அறுத்து உலர்த்தி வைத்திருக்கிற இஞ்சியை அடுப்பின்மீது இரும்பு பாணைசட்டிவைத்து அதிற்போட்டு நெய்விட்டு பொன்வர்ணமாக வறுத்து உரலில் போட்டு சூரணமாயிடித்து அதில் மேலெழுதிய சூரணங்களையும் சர்க்கரையுங்கூடக்கலந்து தேன்விட்டுக் கலக்கி மர்த்தனஞ்செய்து நெய்க் கலசத்தில் போட்டுவைத்துக் கொண்டு இரண்டு வேளையிலும் இரண்டு விராகனிடை பிரமாணம் சாப்பிடவும். இச்சாபத்தியம். புளியேப்பம், சோகை, காமாலை, காசம், சுவாசகாசம், அக்னிமந்தம், குன்மம், லகுஅக்னிமந்தம், மலக்கட்டு முதலாகியது நிவர்த்தியாகும்.

ஷை யாா.

---

நெ. 1004

## வேறொருவிதம். தாளிசச் சூரணம்.

தாளிசபத்திரி பலம்-1, மிளகு பலம் 1, செவ்வியம்பலம் 1, சித்திரமூலம் பலம்-1, திப்பிலிபலம்-2, திப்பிலிமூலம் பலம் 2, சுக்கு பலம்-3, கோஷ்டம் பலம்-3, வெட்டிவேர் பலம்-3, ஏலம்

பலம்-¾, சன்னலவங்கப்பட்டை பலம்-¾, லவங்கப் பத்திரி பலம்-¾, நாகேசரம் பலம்-¾, கடுக்காய் பலம்-¾, லவங்கம் பலம்-½, இவை களைச் சேர்த்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து இந்தச் சூர்ணம் இரண்டு பங்கும் சருக்கரை ஒருபங்கும் கலந்து வைத்துக்கொள்ள வும், இரண்டு வேளையும் 2-விராகனிடை பிரமாணம் சாப்பிட்டுக் கொண்டுவரவும். இச்சாபத்தியம் நீரும்வியாதி பீனசு-சுவாசகாசம் அரோசிகம்-அக்கினிமந்தம்-வமனம்-அதிசாரம்-குன்மம் பீலிகசாட் டியங்கள்-ஆமபயம் முதலிய ரோகங்கள் தீரும். ஷை யார்.

## செ. 1005

## பத்திய கிரமம்.

புஷ்பம், சந்தனம், கற்பூரம், தாம்பூலம், சிவப்பு வஸ்திரம், நெய், வெல்லம், நல்லெண்ணெய், நற்போஜனம், கச்சைப்பட்டைப் போட்ட கட்டில் புதுவஸ்திரம், காற்றடிக்குமிடம், ஸ்திரீகளின் ஸ்பரிசம் இவைகளை நீக்கவேண்டும்.

அதிசாரசாட்டியமுள்ளோர்க்கும் கர்ப்பஸ்திரீகளுக்கும் வயது சென்றவர்களுக்கும் குழந்தைகளுக்கும் இந்திரிய நஷ்டமுள்ளபேர் களுக்கும் வழிநடந்தபேர்களுக்கும் நேத்திர ரோகிகளுக்கும் க்ஷய ரோகிகளுக்கும் கிராணி ரோகிகளுக்கும் லங்கணங் கூடாது.

# இங்கிலீஷ் தமிழ்

# வைத்திய சிகாமணி

## முற்றுப்பெற்றது.



THE B. N. PRESS, EDUCATIONAL PRINTERS, MADRAS—1936